அறுபத்து ஒன்றுவது

# ஆண்டு அறிக்கை




# இந்து மதாபிமான சங்கம், காரைக்குடி.

நிறுவியது : 1917 பதிவு எண் : S. 11/64

காளயுக்தி - புரட்டாதி 21 (7—10—78)






மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

9—11—1919ல் சங்க நிலையத்தில் படம் எடுக்கப்பெற்றது.




# அறுபத்தோன்றும் ஆண்டு அறிக்கை

தலைவர் அவர்களே! பெருமக்களே!

வணக்கம். நமது சங்கத்தின் 61ஆவது ஆண்டு அறிக்கையை உங்கள் முன் சமர்ப்பிப்பதில் பெருமகிழ்வு எய்துகிறேன்.

தோற்றம் :

மகாகவி பாரதியின் பாடல் பெற்ற பெருமைமிக்க நமது இந்து மதாபிமான சங்கம், பிங்கள ஆண்டு ஆவணித் திங்கள் இருபத்தாறும் நாள் (10—9—1917) "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற அப்பர் சுவாமிகளின் அருள் வாக்கிற்கு ஏற்ப. அமரர் சொ. முருகப்பா முதலிய இளைஞர்கள் ஆர்வத்தால் எழுச்சியுறத் தோன்றியது. அமரர் தமிழ்க்கடல் இராய. சொ. அவர்களின் பெருமுயற்சியால் வளம்பெற வளர்ந்து விளங்குகின்றது. நம் நாட்டின் பலதுறை வல்லுநர்களும் வருகைதந்து சிறப்பித்துள்ளனர். விவேகானந்தர் நூல்நிலையமும், படிப்பகமும், மருந்தகமும் நமது சங்கத்தின் முக்கியப் பணிகள்.

**நோக்கம் :**

சமயப்பற்று நாட்டுப்பற்று, மொழிப்பற்று, நல்லோர் கூட்டுறவு, இலக்கிய ஆர்வம் ஆகியவற்றை வளர்த்தல், நமது சங்கத்தின் முக்கிய நோக்கமாகும். அவை வளர்வதற் குரிய சூழ்நிலையை உண்டாக்கித் தருவதிலேயே கருத்துச் செலுத்தப்பெறுகிறது.

**நிருவாகம் :**

நமது சங்கத்தின் நிருவாகம் ஒரு தலைவர், ஒரு துணைத் தலைவர், ஒரு செயலாளர், ஒரு துணைச் செயலாளர், ஒரு பொருளாளர் ஆறு நிருவாக உறுப்பினர் ஆகப் பதினொருவர் கொண்ட ஒரு குழுவால் நடத்தப்பெருகிறது.

**நேரம் :**

சங்கம் காலை 9 மணி முதல் பகல் 12 மணி வரையிலும், மாலை 3 மணி முதல் இரவு 7 மணி வரையிலும் திறக்கப் பெற்றிருக்கும்.

**கட்டிடம் :**

நமது சங்கம், துவக்கத்தில் வாடகைக் கட்டிடத்தில் இருந்து பணியாற்றி வந்தது 31—12—43ல் சங்கத்தின் வெள்ளி விழா, தமிழ்ப் பெரியார் திரு. வி க. அவர்களின் சீரிய தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றபோது அவர்களே சங்கத்தின் சொந்தக் கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டினுர்கள். செல்வர்கள் அளித்த பெருநிதியைக்கொண்டு கட்டிடம் கட்டி முடிக்கப்பெற்றது. தமிழ்நாட்டின் தவப் புதல்வராம் இராஜாஜி அவர்களால் 24—10—52ல் திறக்கப் பெற்றது.

சங்கக் கட்டிடத்தின் மேல்மாடி "ராய. சொ. உமையாள் மண்டபம்" சங்கத் தலைவர் "தமிழ்க்கடல்" "சிவமணி" "சிவம்பெருக்கும் சீலர்" "வண்கவி வள்ளல்" ராய. சொ. அவர்கள் அளித்த பொருளுதவியுடன் கட்டப் பெற்று திரு. கருமுத்து தியாகராஜன் செட்டியார் அவர்கள் தலைமையில் திரு அ.மு மு. முருகப்பசெட்டியார் அவர்களால் 31—1—1965ல் திறந்து வைக்கப்பெற்றது.

### விவேகானந்தர் நூல் நிலையம்

நமது சங்கத்தின் ஓர் அங்கமான நூல் நிலையம் காளயுக்தி ஆண்டு ஆவணித் திங்கள் ஐந்தாம் நாள் (27–8—1918) நிறுவப்பெற்றது. இலக்கியம், இலக்கணம், சமயம், பொது அறிவு நூல்களும், பல்வேறு துறை வெளியீடு களும், நூல் நிலையத்தை அணி செய்கின்றன இன்று நூல் நிலையத்தில் 2651 தமிழ்ப் புத்தகங்களும், 437 ஆங்கிலப் புத்தகங்களும், 10 வடமொழிப் புத்தகங்களும் 11 இந்திப் புத்தகங்களும் ஆக 3109 புத்தகங்கள் உள்ளன.

### படிப்பகம் :

சங்கத்து மற்றோர் அங்கமாக இலவசப் படிப்பகம் நடைபெறுகிறது. தினமணி நாளிதழும், ஆனந்த விகடன், குமுதம், ஆகிய வார இதழ்களும், துக்ளக், வானொலி ஆகிய மாதம் இருமுறை வெளியீடுகளும், கலைமகள், மஞ்சரி, சித்தாந்தம், திருக்கோயில், அருள், தர்ம சக்கரம், குமரி மலர், சமய ஜோதி, ஆகிய மாத வெளியீடுகளும் படிப்பகத்திற்கு வருகின்றன. நாள்தோறும் அன்பர்கள் பலர் வந்து படித்துப் பயன்பெறுகின்றனர். வானொலிப் பெட்டியும் இருந்து பயன் சுரக்கிறது. காலஞ் சென்ற மு. நடராசன் செட்டியார் அவர்கள் தர்ம சக்கரம் என்ற மாத வெளியீட்டிற்குச் சங்கத்தின் பெயரால் ஆயுள் சந்தா கட்டியுள்ளார்கள்.

### மருந்தகம் :

அமரர் தமிழ்க்கடல் இராய.சொ. அவர்களின் எண்ணத் திற்கேற்ப 16—4—75ல் திறக்கப்பட்ட மருந்தகம் டாக்டர் பி. கே. நாராயணன் அவர்களால் நடத்திவரப்பெறுகிறது. நாள்தோறும் காலை 7–30 மணி முதல் 8 மணி வரை இயங்கி வருகிறது. மக்கள் இலவச மருந்தும் மருத்துவ உதவியும் பெற்றுப் பயனடைந்து வருகின்றனர்.

### புதிய கட்டிடங்கள் :

செக்காலையில் நமது சங்க உடைமையாக ஐந்து வீடுகள் உள்ளன சமய குரவர்களின் நினைவாக, இவை "அப்பர் இல்லம்" "சம்பந்தர் இல்லம்" "சுந்தரர் இல்லம்" "மணிவாசகர் இல்லம்" "சேக்கிழார் இல்லம்" என்னும் பெயர்கொண்டு விளங்குகிறது.

இந்த வீடுகள் கட்டும் பணியில் அன்பர்கள் பலரும் துணை நின்றனர். அவருள்ளும் அமரர் அழ. அழகப்பன் (சக்தி) அவர்கள் செய்த தொண்டு குறிப்பிடத்தக்கது.

இவ் வீடுகளினின்றும் வரும் வாடகை சங்கத்திற்கு நிலைத்த வருவாயாகும்.

**செயற்குழு :**

இவ்வாண்டு செயற்குழு பத்து முறை கூடி, சங்கப் பணிகளை நிறைவேற்றியது.

**உறுப்பினர்களின் எண்ணிக்கை :**

| | |
|---|---|
| புரவலர் :- | 255 |
| ஆயுள் உறுப்பினர் :- | 273 |
| ஆண்டு உறுப்பினர் :- | 30 |
| மொத்த உறுப்பினர் | 548 |

**இரங்கல் தீர்மானங்கள் :-**

இந்த ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்த நமது சங்கத்தின் புரவலர்களான திருவாளர்கள் மதுரை எஸ். பி. எம். மெடிகல் மார்ட் அதிபர் இராம. ஆறு. சுப்பிரமணியன் செட்டியார், கண்டனூர், சி. நெ. வீர. சி. வீர. வீரப்பசெட்டியார், காரைக்குடி சுப சு.இராம. சுப்பிரமணியன் செட்டியார், கண்டனூர் வயி. அ வயிரவன் செட்டியார், கோனாப்பட்டு க. மு. அ. முத்தப்ப செட்டியார், உ. சிறுவயல் அரு. சு. சு. இராம. சுப்பிரமணியன் செட்டியார், வாணாள் உறுப்பினர்களான காரைக்குடி முரு. சுப. ராம. தெ. சுப்பிரமணியன் செட்டியார், மு நடராசன் செட்டியார் ஆகியோரின் மறைவு குறித்து இரங்கல் தீர்மானங்கள் நிறைவேற்றப்பெற்றன.

**அறுபதாம் ஆண்டு விழா :**

8—10—77 சனிக்கிழமை காலை 9-30 மணி அளவில் நமது சங்கத்தின் 60-ஆம் ஆண்டு விழா நடைபெற்றது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் தலைமை ஏற்க கம்பன் அடிப்பொடி அவர்கள் வரவேற்புரை வழங்கினர்கள்.

செயலாளர் நா. மெய்யப்பன் அறிக்கை படித்தார்கள். திரு. அவ்வை நடராசன் அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தினர்கள். தலைவர் முன்னுரைக்குப்பின் "சமயசமரசம்" என்ற தலைப்பில், பேராசிரியர் இரா. சாரங்கபாணி அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். மாலை 5 மணியளவில் அவதாரத்தில் சிறந்தது இராமாவதாரமே-கிருஷ்ணவதாரமே என்ற தலைப்பில் பட்டி மண்டபம் நடைபெற்றது. இராமாவதாரமே என்ற அணியில் திரு. கு. துரைராஜ், திருமதி. சரஸ்வதி ராமநாதன், திரு பி வி. அயூப் செல்வி குருவம்மாள் ஆகியோரும், கிருஷ்ணவதாரமே என்ற தலைப்பில் திரு. அவ்வை நடராசன், திருமதி. இரா. காந்திமதி திரு. க. வெ இராமநாதன், திருமதி. இராசம் மரகதம் ஆகியோரும் வாதிட்டனர். தலைவர் "கிருஷ்ணவதாரமே" சிறந்தது எனத் தீர்ப்புரை வழங்கியபின் செயலாளர் நன்றி நவில நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நடந்தேறியது

9-10-77 ஞாயிற்றுக்கிழமை காலை 9-30 மணிக்குக் கவியரங்கம் தலைவர் திரு.எஸ் கே. இராமராசன் அவர்கள் தலைமையில் நடந்தது. இறைவணக்கத்திற்குப்பின் சங்கத் தலைவர் திரு கம்பன் அடிப்பொடி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர்கள். யாமறிந்த புலவர் என்ற தலைப்பில் வள்ளுவர், இளங்கோ, கம்பர், சேக்கிழார், செயங் கொண்டார், பாரதியார், ஆகியோர் பற்றி முறையே செல்வி. குருவம்மாள், சொ. சிங்காரவேலன், சீனிவாசன், மா. வே. பகவதி, நாஞ்சில் நெடுமாறன், அரு. நாகப்பன், ஆகியோர் கவிதை பாடினர். மாலை 5-30 மணியளவில் திரு எஸ். இராமகிருஷ்ணன் அவர்கள் தலைமையில் பாரதியை யாம் கண்டவாறு என்ற தலைப்பின்கீழ்க் கருத்தரங்கம் நடைபெற்றது. இலக்கிய மேதை எனத்தலைப்பில் அ வ. இராசகோபாலன் அவர்களும், சமய ஞானி என்ற தலைப்பில் சொ. சிங்காரவேலன் அவர்களும், சமுதாயச் சிற்பி எனுந் தலைப்பில் நாஞ்சில் நெடுமாறன் அவர்களும் உரையாற்றினர். தலைவர் முடிவுரைக்குப்பின் செயலாளர் நன்றிநவில நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

**அமரர் தமிழ்க்கடல் இராய. சொ. அவர்களின் நான்காம் ஆண்டு விழா :**

காளயுக்தி ஆண்டு புரட்டாசித் திங்கள் 14ம் நாள் 30—9—78 சனிக்கிழமை மாலை 6 மணி அளவில் தமிழ்க் கடல் இராய. சொ. அவர்களின் 4-ஆம் ஆண்டு நினைவு நாள் நடைபெற்றது திரு இரா. சாரங்கபாணி அவர்கள் தலைமை ஏற்று, சங்கத் தலைவர் திரு சொ அழகப்பன் அவகள் அனைவரையும் வரவேற்றார்கள். தலைவர் உரைக்குப்பின் இராய சொ. புலமைமேரு என்று பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரம் அவர்களும் "சமய ஞாயிறு" என்று திரு. சுப. அருணாசலம் அவர்களும் உரையாற்றினார்கள். தலைவர் முடிவுரைக்குப்பின் செயலாளர் நன்றிநவில நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நிறைவேறியது.

**வேண்டுகோள் :**

இப்பகுதி மக்களின் விழிப்புணர்ச்சிக்குக் காரணமாக விளங்கும் இச்சங்கம் மேலும் மேலும் வளர்ச்சி பெற்றுப் பல நற்பணிபுரியப் பலரும் புரவலராகவும், ஆயுள் உறுப்பினராகவும் சேர்ந்து பங்கேற்கும்படி பணிவுடன் வேண்டுகிறோம்.

நமது சங்கத்தைப் பல்லாண்டுகளாகப்பேணிவளர்த்த பெரியோர்கட்கும், புரவலர்களாயும் உறுப்பினர்களாயும் இருந்து ஊக்கமளித்த அன்பர்கட்கும், புத்தகங்கள், பொருள்கள் தந்து ஆக்கம் அளித்தவர்கட்கும், விழாக் களில் தலைமை ஏற்றும், பங்கு பெற்றும் அரும்பணி புரிந்த தமிழ்ப் பெருமக்கட்கும், சங்க வளர்ச்சிக்கு உறுதுணை அளிக்கும் அனைவர்க்கும் நன்றிகூறி மகிழ்கிறோம்.

காரைக்குடி,
7—10—1978.

**நா. மீனவன்,**
செயலாளர்.



# இந்து மதாபிமான சங்கம், காரைக்குடி.

## 3—10—77 முதல் 27—9—78 வரை

### வரவு செலவு கணக்கு

| வரவு | ரூ. | பை. |
|---|---|---|
| ஆதாய வரவு | 104 | 80 |
| வட்டி வரவு | 4941 | 83 |
| நுழைவுக் கட்டணம் | 3 | 00 |
| செக்காலை நால்வர் இல்லம் வாடகை வரவு | 4080 | 00 |
| ஷை சேக்கிழார் இல்லம் வாடகை வரவு | 825 | 00 |
| உறுப்பினர் சந்தா | 108 | 00 |
| ஆக வரவு | 10062 | 63 |

பற்று

| | | |
|---|---|---|
| சங்கக் கட்டிடம் இட வாடகை செலவு | 151 | 00 |
| கட்டிட மராமத்துச் செலவு | 1799 | 36 |
| ஆண்டு விழாச் செலவு | 1729 | 45 |
| அச்சுக் கூலிச் செலவு | 25 | 00 |
| சொற்பொழிவுச் செலவு | 65 | 00 |
| மின் கட்டணச் செலவு | 323 | 55 |
| நகராட்சி வரிச் செலவு | 1403 | 26 |
| பத்திரிகைச் சந்தாச் செலவு | 256 | 30 |
| சிப்பந்திகள் சம்பளச் செலவு | 1385 | 00 |
| மருந்தகச் செலவு | 1976 | 17 |
| பல்வகைச் செலவு | 340 | 15 |
| செலவு நீக்கி இருப்பு | 608 | 39 |
| ஆக பற்று | 10062 | 63 |

**கரு. கதி. கருப்பஞ் செட்டியார்,**

**V. S. ராமசாமி.**

குறிப்பு:- பேரேடு ஆதரவு தஸ்தாவேஜுகள் அனைத்தும் சரியாக உள்ளன.

குறிப்பு:- கட்டிட மராமத்து சிலவு நமது சங்கம் இருக்கும் கட்டிடம் பின்புறம் மிகவும் பழுதடைந்துவிட்ட படியால் அது சம்மந்தமாக சுவர் வைத்து ரிப்பேர் பார்க்கவும், செக்காலை நால்வர் இல்லம் சேக்கிழார் இல்லம் இவைகளில் நகராட்சி தண்ணீர் குழாய் இணைக்கவும் சதா ரிப்பேர் பார்க்கவும் சிலவு ஏற்பட்டிருக்கிறது. இவை களினால் மராமத்து சிலவு கூடுதலாக ஏற்பட்டிருக் கிறது. எல்லாவற்றிற்கும் வவுச்சர்கள் இருக்கிறது.

**சொ. அழகப்பன்.** **V. S. ராமசாமி.**

# இந்து மதாபிமான சங்கம்

## காரைக்குடி.

### ஐந்துகை விபரம்

| | வரவு | ரூ. | பை. |
|---|---|---|---|
| 3 | ஆதாய வரவு | 104 | 80 |
| 6 | வட்டி வரவு | 4941 | 83 |
| 9 | நன்கொடை | 180 | 00 |
| 11 | நுழைவுக் கட்டணம் | 3 | 00 |
| 13 | புரவலர் கொடை | 200 | 00 |
| 18 | உறுப்பினர் சந்தா | 108 | 00 |
| 19 | மூலதனக் கணக்கு | 139173 | 60 |
| 23 | இடம் கட்டிடங்கள் முன்பணம் | 1985 | 00 |
| 28 | செக்காலை நால்வர் இல்லம் வாடகை வரவு | 4080 | 00 |
| 32 | ஷை சேக்கிழார் இல்லம் வாடகை வரவு | 825 | 00 |
| 77 | தொலைபேசிக் கட்டணம் வரவு | 86 | 25 |
| 95 | இராய. சொ. நினைவு நாள் நிதி வரவு | 3500 | 00 |
| | ஆக வரவு | 155187 | 48 |

கரு. கதி. கருப்பஞ் செட்டியார்.

| | | |
|---|---|---|
| மூலதனக் கணக்கு வரவு ஆரம்பம் | 139173 | 60 |
| நடப்பு ஆண்டு லாபம் லாப நட்டக்கணக்குப்படி | 608 | 39 |
| நடப்பு ஆண்டில் நன்கொடை வரவு | 180 | 00 |
| ஷை ஆண்டில் புரவலர் கொடை வரவு | 200 | 00 |
| ஷை ஆண்டில் நம் சங்கத் தொலைபேசியை டிஸ்கனெக்ட் செய்த வகையில் வரவு | 86 | 25 |
| | 140248 | 24 |

| | | |
|---|---|---|
| மூலதனக் கணக்கு | 140248 | 24 |
| இடம் கட்டிடங்களின் முன் பணம் | 1985 | 00 |
| இராய. சொ. நினைவு நாள் நிதி வரவு | 3500 | 00 |
| | 145733 | 24 |

சொ. அழகப்பன்.

# இந்து மதாபிமான சங்கம்

## காரைக்குடி.

### ஐந்துகை விபரம்.

| | பற்று | ரூ. | பை. |
|---|---|---|---|
| 33 | கட்டிடம் கொள்முதல் | 37013 | 94 |
| 35 | செக்காலை நால்வர் இல்லம் கொள்முதல் | 51046 | 67 |
| 37 | ஷை சேக்கிழார் இல்லம் கொள்முதல் | 9854 | 25 |
| 39 | சாமான் கொள்முதல் | 7171 | 69 |
| 41 | நூலகம் கொள்முதல் | 1559 | 94 |
| 43 | இடம், வாடகை முன்பணம் | 1170 | 00 |
| 45 | மின்சார இலாகா முன்பணம் | 410 | 00 |
| 47 | மதருஸ் ஏஷியன் டிராவல்ஸ் இ. பி. லிட். | 16000 | 00 |
| 49 | காரைக்குடி மு.மெ. முத்துராமன் செட்டியார் | 10000 | 00 |
| 51 | மதுரை வங்கி ஷேர் கொள்முதல் | 5000 | 00 |
| 55 | மதுரை வங்கி சிறுசேமிப்பு கணக்கு பற்று | 2194 | 78 |
| 60 | சங்கக் கட்டிட இட வாடகை | 151 | 00 |
| 67 | ஆண்டு விழாச் செலவு | 1729 | 45 |
| 69 | அச்சுக் கூலி | 25 | 00 |
| 71 | சொற்பொழிவுச் செலவு | 65 | 00 |
| 73 | மின் கட்டணச் செலவு | 323 | 55 |
| 79 | நகராட்சி வரிச் செலவு | 1403 | 26 |
| 82 | பத்திரிகைச் சந்தா செலவு | 256 | 30 |
| 88 | சிப்பந்திகள் சம்பளச் செலவு | 1385 | 00 |
| 92 | மருந்தகச் செலவு | 1976 | 17 |
| 97 | மதுரை வங்கி டெபாசிட் கணக்கு | 3500 | 00 |
| 113 | கட்டிட மராமத்துச் செலவு | 1799 | 36 |
| 120 | பல்வகைச் செலவு | 340 | 15 |
| | குறிப்பு இருப்பு | 811 | 97 |
| | ஆக பற்று | 155187 | 48 |

கரு. கதி. கருப்பஞ் செட்டியார்.

V. S. ராமசாமி.

குறிப்பு :- பேரேடு ஆதரவு தஸ்தாவேஜுகள் அனைத்தும் சரியாக உள்ளன.

# 61-ஆம் ஆண்டு செயற்குழு

1 திரு. சொ. அழகப்பன், தலைவர்
2 ,, V. RM. இராமசாமி, உபதலைவர்
3 ,, நா. மீனவன், செயலாளர்
4 ,, ராம. தெய்வராயன், துணைச் செயலாளர்
5 ,, அழ. வீரப்பன், பொருளாளர்
6 ,, கம்பன் அடிப்பொடி
7 ,, நா. மெய்யப்பன்
8 ,, லெ. தேனப்பன்
9 ,, இரா. சாரங்கபாணி
10 ,, அழ. இராமனுதன்
11 ,, கா. அரு. காடப்ப செட்டியார்

கணக்கு தணிக்கையாளர்கள்

திரு. V. S. ராமசாமி அய்யங்கார்
,, கரு. கதி. கருப்பஞ் செட்டியார்

# 62-ஆம் ஆண்டு செயற்குழு

1 திரு. சொ. அழகப்பன், தலைவர்
2 ,, V. RM. இராமசாமி, உபதலைவர்
3 ,, நா. மீனவன், செயலாளர்
4 ,, லெ. கணேசன் துணைச் செயலாளர்
5 ,, அழ. வீரப்பன், பொருளாளர்
6 ,, இராம. தெய்வராயன்
7 ,, கா. அரு. கா. காடப்ப செட்டியார்
8 ,, வெ. சு. அழகப்பன்
9 ,, அரு. நாகப்பன்
10 ,, வீர. முருகப்பன்
11 ,, நா. மெய்யப்பன்

